★ தொழிலாளித்வ சமுதாயத்தில் காணப்படும் பார்லிமெண்டு முறை பூர்ஷ்வா ஜனநாயகம். ஜனத் தொகையில் பெரும் பகுதியான பாட்டாளி மக்களுக்கு ஜனநாயகம் உத்திரவாதம் செய்யும் ஆட்சி முறைதான் உண்மையான ஜனநாயகமாக இருக்க முடியும். சமூகத்தில் வாசல் வரை எண்ணிக் கூடிய பெருங்கும்பல்கள் சுரண்டுவதற்கு சுதந்திரம் ஜனநாயகமும் அனுபவிக்கும் பார்லிமெண்டு முறை சுதேச் சாதிகாரமா. பணம் ஆதிக்கம் செலுத்தும் அரசியல் ஏற்பாடு சர்வாதிகாரமல்லவா. சமஉரிமை என்பது. ஜனங்கள் ஜனநாயக உரிமைகள் அனுபவிப்பதை நிர்ணயிப்பதற்கு சமமான உரிமை அளிப்பது என்று அர்த்தமல்ல. ஜனநாயகத்தை ஸ்தாபிப்பதற்கு உட்பட்டே சமஉரிமை அனுஷ்டிக்கப்படவேண்டும். தனிநபர் சுதந்திரம்: தொழிலாளி வர்க்கத்தின் கையில் அதிகாரம் மாற்றப்படுவதற்கு வழியாக தனிநபர் சுதந்திரம் பறிபோகிறது என்கின்றனர். சட்டப்பூர்வமாக சகலருக்கும் சமவுரிமைகளும் ஜனநாயக உரிமைகளும் உத்தரவாதம் செய்யப்படுவது மட்டுமல்ல. ஒவ்வொரு வாளையும் அனுபவிப்பதற்கான நிலைமையும் உத்தரவாதம் செய்யப்படுகிறது. பேச, எழுத, கூட்டங்கூட சகல வாதவசதிகளும் செய்துக் கொடுக்க அரசாங்கம் தனது பொறுப்பாக கொண்டிருக்கிறது. உழைப்பு: சாமான்யமான ஒரு தொழிலாளியும் தன் வேலையில் பயிற்சி பெற்று திறமை பெறுவதன் மூலம் இணையின்றாக திகழ்கிறான். பார்லிமெண்டரி போட்டாமை: வயது வந்தவர்களுக்கு ஓட்டுரிமை வழங்கினால் தொழிலாளி வர்க்கத்தின் மெஜாரிட்டி ஒரு அளவு கோலாக இருக்க முடியுமே யல்லாது மக்களிடம் அதிகாரத்தை ஒப்படைப்பதாக இருக்க முடியாது. ஐந்து வருடத்திற்கு ஒருமுறை ஓட்டுப் பதிவு செய்து ஆவதினால் அவர்களையும் சமத்துவ படுத்த முடியுமா? பொருளாதார ஜனநாயகம் இல்லாமல் வெறும் அரசியல் ஜனநாயகத்தை சட்ட புத்தகங்களில் தீட்டி வைத்துக் கொண்டிருந்தால் மட்டும் உண்மை ஜனநாயகம் வந்து விடுமா?

★ தொழில் வளர்ச்சி: உபயோக பண்டங்கள் உற்பத்தி சாலை ஏற்படுத்தி கொண்ட அளவு மூலதனம் சேகரான பின்னரே கனத் தொழில் என்ற முறையில் தான் முதலாளித்துவ தொழில் வளர்ச்சியடைந்தது. பல நாடுகளின் பலகால சுரண்டல் கொள்ளையடித்த பணமும் நாடுகூட நூறு வருடம் பிடித்தது அந்நாடு தொழில் மயமாக. 1928 லிருந்து 1940 க்குள்ளாக ஜோதியில் மாறுபட்ட சோவியத்து தொழில் வளர்ச்சிக் கண்டது. கொள்ளையடித்தோ சுரண்டியோ, சூறையாடியோ மூலதனம் சேகரிக்கும் வழக்கம் கிடையாது அந்நாட்டில். அதோ புதிய தன்மைக் கொண்டது. உற்பத்தி சக்திகளுக்கு விலங்கிட்ட தனிச் சொத்துடைமை ஒழிக்கப்பட்டு, நிலம் தேச உடமையாக்கப்பட்டு, பாக்டரி பாங்கு சகல சாதனங்களும் பொது உடமையாக்கப்பட்டு, வாரம், வட்டி, லாபம், வரி, இதுபோல வழிகளில் கொள்ளையடிப்பது நிறுத்தப்பட்டமையால் மூலதன சேகரம் ஏற்படும். அன்னிய ஆக்கிரமிப்பை எதிர்த்து நிற்க ஒரு நாடு கனத் தொழில் வளர்ச்சி அடைந்திருக்க வேண்டும். கனத் தொழில் வளர்ச்சியே ஒரு தேசத்தின் சுதந்திரத்தை உத்தரவாதம் செய்யமுடியும். வரவர சாதாரண சோவியத் தொழிலாளி ஒரு தொழில் நுணுக்க வாதி அல்லது விஞ்ஞானியாக நிலைக்கு உயர்த்தப்படுகிறான்.

ஒரு நியாயமான ஜனநாயக சமாதானம் என்றால் நாடுகளை கைப்பற்றுவது (அயல் பிரதேசங்களைக் கைப்பற்றுவது, அயல் நாடுகளைப் பலாத்காரமாகத் தன்னுடன் இணைத்துக் கொள்வது) யுத்தக் கடன் சுமத்துவது என்பதின்றி செய்யப்படும் சமாதானம் என்றே இந்த சர்க்கார் கருதுகிறது. நமது யுகத்திலே மிகப் பெரிய இயக்கமானது சமாதானத்திற்கு மக்கள் போராடும் இயக்கம்.